# தமிழர் வரலாறு கூறும் தொல்லியல் தடயங்கள்

# Archaeological evidence that explains the early history of Tamils

பாபு சகாதேவன் / Babu Sagadevan[1]


### *Abstract*

This paper provides insight into several new sources for the history of the Tamil people. The people of Tamil Nadu are well known for their ability to create great literature, heroism, and charity. In the past the great Tamil kings crossed the vast sea, and conquered many land and brought glory to the motherland. Several archaeological evidence that explains the history of Tamil people have been found in and out of Tamil Nadu. In fact the early rulers have left many more archaeological evidence that could explain the early history of Tamils. A part of them haven found in and out of Tamil Nadu. As an addition to the available evidence, the author has found a number of artefacts (including inscriptions) during his field work. These artefacts are said to describe rare messages about early life of the Tamils.


**Key Words:** inscription, archaeology, Tamil people, *Nadukal*, artefacts, Nattamedu.

## முன்னுரை

வரலாற்றில் தமிழகத்திற்கென ஒரு தனியிடம் எப்போதும் உண்டு. "கல்தோன்றி மண் தோன்றா காலத்தே வாளொடு முன்தோன்றி முத்தகுடி தமிழ்க்குடி" என சான்றோர்களால் புகழப்பட்டது தமிழகம். தமிழ் மக்கள் இலக்கியம் படைப்பதிலும், வீரம்,கொடைத்தன்மையாலும் உயர்ந்து விளங்கினார். தமிழ் மன்னார்கள் கடல்கடந்து சென்று போரிட்டு நமது மண்ணின் பெருமையை நிலைநாட்டியுள்ளனார். மேலும் தமிழார்கள் கலைகளுக்கும் முக்கித்துவம் அளித்து பல கோயில்களையும் அவற்றில் கலையம்சங்கள் நிறைந்த அழகிய சிற்பங்களையும் இக்கால சிற்ப வல்லுனார்களும் வியக்கும்படி படைத்துள்ளனார். இத்தகைய தமிழரின் வரலாற்றை நாம் அறிய சான்றுகளாக தமிழகத்தின் பல இடங்களிலும் தொல்லியல் சின்னங்களும், கல்வெட்டுக்களும், செப்பேடுகளும், அயல்நாட்டார் குறிப்புகளும் பயன்படுகின்றன. அந்த வகையில் எனது கள ஆய்வின்போது கண்டறியப்பட்ட தொல்லியல் சின்னங்களைப் பற்றியும், அவற்றால் தெரியவரும் அரிய செய்திகளையும் இக்கட்டுரையில் காண்போம்.

## சார்பிலக்கியங்கள்:

தமிழக வரலாற்றையம், தமிழகத்தில் காணப்படும் தொல்லியல் சின்னங்களைப்

[1] The author is a PhD candidate at Thanjai Tamil University, Tamil Nadu, India. babusaga80@gmail.com

பற்றியும் பல்வேறு வரலாற்று ஆய்வாளார்களும், தமிழறிஞார்களும் பல நூல்களைப் படைத்து தமிழரின் பெருமையை அனைவரும் அறியச் செய்துள்ளனார். அந்த வகையில் கீழ்காணும் நூல்கள் பல அறிய செய்திகளைத் தருவதாக உள்ளது.

*1. முனைவர். செ. இராசு*

இந்நூல் சோழார், பாண்டியார், நாயக்கார் காலச் செப்பேடுகள் தரம் செய்திகள் பற்றியும், செப்பேடுகள் அமைப்பு முறை, தமிழகத்தின் பழமையான செப்பேடுகள் பற்றிய பல வரலாற்றுச் செய்திகளைத் தருகின்றது.

*2. முனைவர். காசிநாதன்*

இந்நூல், தமிழ் வரலாறு மற்றும் தொல்லியல் பயிலும் மாணவார்கள் பலவகை எழுத்துக்களையும் படித்தறியும் விதம், எழுத்துக்கள் ஒவ்வொரு காலத்திலும் மாற்றம் பெற்றநிலை பற்றி கூறுகிறது.

*3. முனைவர். ரோ. நாகசாமி*

இந்நூல், தமிழகத்தில் நடுகற்கல் தோற்றம், அதன் வரலாறு, நடுகல் வகைகள், செங்கம் பகுதி நடுகற்கள், நடுகற்கள் பற்றிய பல செய்திகளை இந்நூல் தருகிறது.

*4. முனைவர். மா. பவானி*

இவார் "தமிழக வரலாற்று ஆவணங்கள்" என்ற தலைப்பில் எழுதிய நூல் 2017ம் ஆண்டு வெளியிடப்பட்டது. இந்நூல் இந்திய கல்வெட்டுகளின் வரலாறு, குறியீடுகள், தமிழகக் கல்வெட்டுகள், கல்வெட்டுகள் பற்றியப் பயிற்சி போன்ற பல செய்திகளைத் தருகின்றது.

*5. முனைவர். எல். மணிவண்ணன்*

இந்நூல் கோயில்களின் வகைகளட, சிற்ப முறைகள், சோழார், பாண்டியார், நாயக்கார் கால கோயில் அமைப்புகள், கோயில் ஆய்வு முறைகள் பற்றிய செய்திகளைத் தருகின்றது.

*6. முனைவர். கா. ராஜன்*

இவார் "கல்வெட்டியல்" என்ற தலைப்பில் எழுதிய நூல் 2006ம் ஆண்டு வெளியிடப்பட்டது. இந்நூல் கல்வெட்டியல் பயிலும் மாணவார்கள் பயன்பெறும் வகையில், எழுத்துக்களின் தோற்றம், பிராமி எழுத்துக்கள், கரோ~ர்டி எழுத்துக்கள், வட்டெழுத்து, கிரந்த எழுத்து மற்றும் தமிழ்க் கல்வெட்டுகளின் தன்மை பற்றிய பல செய்திகளைத் தருகின்றது.

## களஆய்வு கண்டுபிடிப்புகள்

*1. போர்வீரன் நடுகல் வரகூர், நாமக்கல் மாவட்டம்: 29.10.2017*



தமிழார்கள் மண்ணின் பெருமையையும் வீரத்தையும் போற்றி வந்தனார். முற்காலத்தில் வீரமரணம் அடைந்தவார்களை தெய்வமாக வழிப்பட்டு நன்றி செலத்தினார்.அதுவே நடுகல் வழிபாடு எனப்பட்டது.

*"காட்சி கால்கோள் நீர்படை நடுகல்*

*சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தலன்று*

*இருமூன்று மரபிற் கல்லொடு புணர"*

(தொலபுறத்திணையியல்: 5)

என தொல்காப்பியம் நடுகல் நடப்படும் முறையை விளக்குகின்றது. அந்த வகையில் நாமக்கல் துறையூர் சாலையில் உள்ள வரகூர் என்ற கிராமத்தில் உள்ள செல்லாண்டியம்மன் கோவில் வளாகத்தில் இந்நடுகல் கண்டுபிடிக்கப்பட்டது. இந்நடுகல்லை இவ்வூர் மக்கள் வேல்காரன் கோவில் என அழைக்கின்றனார், வழிபாடும் செய்யப்படுகின்றது. இந்நடுகல் அமைப்பு ஒரு போர்வீரன் தலையில் குடுமியோடும், கையில் கூர் வேல் ஏந்தி போர் செய்யும் நிலையிலும்

புடைப்புச் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது.

இந்நடுகல்லில் எழுத்துக்கள் ஏதும் காணப்படவில்லை. இந்நடுகல் ஒரு மண்டபத்தினுள் வைக்கப்பட்டுள்ளது. இம்மண்டப விதானத்தில் பாண்டியார்கால மீன் முத்திரை சின்னம் புடைப்புச் சிற்பமாகப் பொறிக்கப்பட்டுள்ளது மற்றும் கருடாழ்வார் சிற்பமும், மண்டபத்தூண்களில் சிவலிங்கச் சிற்பம், போர் வீரார்கள் போரிடும் சிற்பம், நாயக்க மன்னார், அரசியின் சிற்பமும் வணங்கிய நிலையில் காணப்படுகின்றது.இந்நடுகல் 1500 ஆண்டுகள் பழமையானதாக கருதப்படுகின்றது. தொல்காப்பியம் நடுகல் நடப்படும் முறைபற்றி கூறுகின்றது.

***2. தூசூர் - நாமக்கல் மாவட்டம், போர்வீரன் நடுகல்: 14.12.2017***



நாமக்கல் துறையூர் சாலையில் உள்ள தூசூர் என்ற கிராமத்தில் உள்ள வயல்வெளியின் நடுவே இப்போர்வீரனின் நடுகல் கண்டுபிடிக்கப்பட்டது. இந்நடுகல்லின் அமைப்பு தலையில் குடுமியோடும், ஒரு கையில் வாள்மற்றொரு கையில் கேடயம், இடையில் தோல் ஆடை அணிந்த நிலையிலும் இந்நடுகல் காணப்படுகின்றது.

இதன் உயரம் ஐந்து அடி, அகலம் இரண்டு அடி அளவில் காணப்படுகின்றது. தமிழகத்தில் கண்டுப்பிடிக்கப்பட்ட நடுக்கற்கலில் இது மிகப் பெரியதாக உள்ளது. இந்நடுகல் ஆயிரம் ஆண்டுகள் பழமையானதாக இருக்கலாம். தற்போது இது பாதுகாப்பற்ற நிலையில் உள்ளது. முறகாலத்தில் இப்பகுதி நாயக்க மன்னார்களின் ஆட்சிப் பகுதியாக இருந்து வந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

மேலும் இப்பகுதியில் உள்ள சேந்தமங்கலத்தை தலைமையிடமாக கொண்டு ராமச்சந்திர நாயக்கார் ஆட்சி செய்துள்ளார். கி.பி 16ஆம் நூற்றாண்டில் என வரலாற்று குறிப்புகள் கூறுகின்றன. (ராமச்சந்திர நாயக்கார் விக்கிபீடியா) எனவே இந்நடுகல் உள்ள பகுதி நாயக்கார் ஆட்சிர்பகுதியாகும்.. இந்நடுகல் 1500 ஆண்டுகள் பழமையானதாக கருதலாம்.

***3. தூசூர் ஏரி, நாயக்கார் நினைவுக்கல்: 14.12.2017***

நாமக்கல் மாவட்டம், தூசூர் ஏரியின் கரையில் உள்ள கன்னிமார் கோவிலில் நாயக்க மன்னார்களின் நினைவுக்கல் எனப்படும் (ஆநஅழசல ளுவழநெ) காணப்படுகின்றது. இங்கு வணங்கிய நிலையில் இரண்டு நாயக்க மன்னார்களின் சிற்பமும், ஒரு பெண் வணங்கிய நிலையில் உள்ள சிற்பமும் காணப்படுகின்றது.

இப்பகுதி சேந்தமங்கலம் நாயக்கார்களின் ஆட்சிக்கு உட்பட்ட பகுதியாக முற்காலத்தில் இருந்துவந்துள்ளது. பொதுவாக முற்காலத்தில் சமுகத்தில் சிறப்பாக



வாழ்ந்துவந்த அல்லது ஆட்சிபுரிந்த மன்னார் வீரார் போன்றவார்கள் இயற்கை மரணமடைந்த நிலையில் அவார்களைப் போற்றும் விதமாக நினைவுக்கல் அமைக்கப்படுவது பண்டைய மரபாகும். அந்த வகையில் இப்பகுதியை ஆட்சிசெய்த ஒரு குறுநில மன்னருக்காக இந்நினைவுக்கல் நடப்பட்டுள்ளது. இக்கல் 16ம் நூற்றாண்டைச் சோர்ந்ததாக கருதப்படுகின்றது. நடுகல் நடப்படுவதைப்பற்றி கூறும் அகநானூறு பாடல் வரிகள்

"பெயரும் பீடும் எழுதி அதரர்தொரும்

பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்" (அகம் 67)

அந்த வகையில் நினைவுக்கல்லும் நடுகல்லே எனலாம்.

**4. பவித்திரம் - தொல்லியல் எச்சங்கள் மற்றும் சிற்பங்கள் கண்டுபிடிப்பு: 08.11.2017**





நாமக்கல் மாவட்டம், பவித்திரம் கிராமத்தில் உள்ள நந்தமேடு என்ற பகுதியில் கள ஆய்வு மேற்கொண்டபோது, இங்கு முற்கால மக்கள் வாழ்ந்ததற்கான தடயங்கள் கண்டுபிடிக்கப்பட்டன, அவார்கள் பயன்படுத்திய மட்பாண்டங்கள் மற்றும் கற்கோடரிகள் மற்றும் சிவன் கோயில் ஒன்று இருந்து அழிந்ததற்கான தடயங்களாக உடைந்த நிலையில் சிவலிங்கம், நந்திசிலை மற்றும் துவாரபாலகார்கள் சிற்பங்கள் சிதைந்த காணப்பட்டது மற்றும் இங்கு இருந்த சிவன் கோயிலின் தூண் பாகங்களும் கிடைத்துள்ளன. இங்கு கிடைத்துள்ள மட்பாண்டங்கள் 800 ஆண்டுகள் பழமை வாய்ந்ததாக இருக்கலாம். இப்பகுதி முற்காலத்தில் மக்கள் வாழ்ந்த பகுதியாக இருந்துள்ளது.

இங்கு கிடைத்துள்ள சிவலிங்கம் பீடப்பகுதி மட்டுமே கிடைத்துள்ளது. லிங்கம் காணப்படவில்லை. சிற்ப சாஸ்திரப்படி சிவலிங்க வடிவம் மானு~லிங்கம்இ சமகண்டலிங்கம்இ சைவாதிகலிங்கம்இ தாராலிஙகம்இ ஸ்வஸ்திகலிங்கம் என பல வகைகள் உள்ளன. (மணிவண்ணன்இ 2015இ ஜீ.116)

**5. நாமக்கல் மாவட்டம் குமாரமங்கலம், பாறை ஓவியம்: 27.11.2017**

தமிழரின் வாழ்வோடு இணைந்தவை கலைகள்இ முற்கால மனிதன் தன் கருத்தை வெளிப்படுத்த ஓவியக்குறியீடுகளை பாறைகளிலும்இ குகைகளிலும் வரைந்தான். புஜீன் நாகரீக வளார்ச்சியடைந்த காலத்தில் கோவில்களிலும்இ இல்லங்களிலும் வரைந்து அழகுப்படுத்தினான். நம் தமிழகத்தில் உள்ள பல கோவில்களில் புராதன ஓவியங்கள் இன்றும் கலைநயத்தோடு காட்சியளிக்கின்றன. குறிப்பாக மதுரை மீனாட்சி அம்மன் கோவில் ஓவியங்கள்இ அழகார் கோவில் இராமயண ஓவியம்இ தில்லை நடராஜார் கோவில் ஓவியங்கள் போன்றவை ஓவியக்கலை தமிழகத்தில் வளார்ச்சியடைந்திருந்ததை காட்டுகிறது. (மணிவண்ணன்இ 2005இ ஜீ.305)

நாமக்கல் திருச்செங்கோடு சாலையில்

உள்ள குமாரமங்கலம் கிராமத்தில் உள்ள சாலையோர கிணற்றில் பாண்டியார் காலத்தைச் சோர்ந்த பாறை ஓவியம் கண்டுப்பிடிக்கப்பட்டது. இவ்வோவியத்தில் வீரன் ஒருவன் ஒரு விலங்கை ஈட்டியால் குத்துவது போலவும், இருவார் மத்தளம் வாசிப்பது போலவும் பாறையில் பொறிப்பு ஓவியமாக படைக்கப்பட்டுள்ளது.

மேலும் இக்கிணற்றின் உள்ளே ஆமை, இரட்டை மீன் சிற்பங்கள் மற்றும் பாண்டிய மன்னார்களின் புடைப்புச் சிற்பமும் காணப்படுகின்றது. இப்பகுதி முற்காலத்தில் பெருவழிச்சாலையாக இருந்துள்ளது. வியாபாரிகளும், மக்களும், வழிப்போக்கார்களும் தங்களுடைய பயணத்தின்போது இவ்வூரில் தங்கியிருந்து இக்கிணற்று நீரை குடிப்பதற்குப் பயன்படுத்தியுள்ளனார் என்பது தெரியவருகிறது. இவ்வோவியம் 1100 ஆண்டுகளுக்கு முற்பட்டது எனக் கருதப்படுகிறது.

***6. எம். களத்தூர் - ஈசனாதீசுவரார் கோயில் கல்வெட்டு***



திருச்சிராப்பள்ளி மாவட்டம், முசிறி அருகே எம். களத்தூர் கிராமத்தில் உள்ள ஈசனாதீசுவரார் கோயிலின்வெளிப்புறச் சுவரில் இக்கல்வெட்டு காணப்படுகின்றது. இக்கல்வெட்டு கூறும் செய்தி: இக்கோயிலில் ஒரு நெற்களஞ்சியமும், கமலரத மண்டபம், மகா மண்டபம் போன்றவை இருந்ததைக்கூறும் செய்தி பொறிக்கப்பட்டுள்ளது.

மேலும் இக்கோவிலின் வெளிப் பிரகாரத்தின் வடபுறத்தில் மூன்று ஜே~ர்டா தேவி சிற்பமும் மற்றும் தூர்கையின் சிற்பமும் காணப்படுகின்றது. இக்கோயிலின் உட்புறம் மற்றும் வெளிபுறத்தில் இரண்டு நந்திகள் காணப்படுகின்றது. கோயிலின் மண்டபத் தூண்களில் நாயக்க மன்னார் மற்றும் அரசியின் சிற்பமும் மற்றும் விதானத்தில் இரட்டை மீன் சின்னமும் பொறிக்கப்பட்டுள்ளது. பொதுவாக நாயக்கார் கலைப்பாணி சிற்பங்கள் அதிகஆபரணங்களும்இ ஆடை அலங்காரமும் கொண்டு அமைக்கப்பட்டிருக்கும். (மணிவண்ணன்இ 2005இ ஜீ.126) இக்கோவில் 1100ஆண்டுகள் பழமையானதாக கருதலாம். இக்கோயிலின் அம்பாள் சன்னதியில் சிதைந்த நிலையில் ஒரு கல்வெட்டும் காணப்படுகின்றது. இக்கோயிலின் கட்டுமான அமைப்பை ஆராயம் போது இது பாண்டிய மன்னார்கள் காலத்தில் கட்டப்பட்டு பின் நாயக்கார் காலத்தில் புணரமைப்பு செய்யப்பட்டிருக்க வேண்டும் என தெரியவருகிறது.

பொதுவாக நாயக்கார் காலக் கோயில்களில் தேவ கோட்டங்களில் தெய்வ உருவங்களை இடம்பெறச் செய்வதில்லை. இத்தகைய அமைப்போடு இக்கோயில் காணப்படுகின்றது. இக்கோயில் அமைப்பு பிரஸ்தரப் பகுதி வகை கற்களாலும், விமானம் காரையாலும் கட்டப்பட்டுள்ளது.

***7. முசிறி வட்டம் - முருங்கை கிராம, பாறைக்கல்வெட்டு: 28.12.2017***

முருங்கை கிராமத்திலுள்ள பெருமாள் கோயிலின் உள் வளாகத்தில் சிதைந்த நிலையில் இக்கல்வெட்டு காணப்படுகின்றது.இக்கல்வெட்டில் இங்குள்ள கோயிலில் பக்தார்கள் தங்குவதற்கு தங்குமிடம் மற்றும் நந்தவனம் அமைக்கப்பட்டதைக் குறிப்பிடும் செய்தி காணப்படுகின்றது. மேலும் இங்கு ஒரு சிவலிங்கபீடமும் சிதைந்த நிலையில் காணப்படுகின்றது. முற்காலத்தில் இங்கு சைவ, வைணவ வழிபாடு நடத்தப்பட்டுள்ளது. என்ற கருத முடிகின்றது. இங்கு சிதைந்த



நிலையில் காரைக் கோயில் இரண்டு காணப்படுகின்றது.. முற்காலத்தில் பலரும் கோவில் திருப்பணிகள்இ நிலக்கொடைகள் அளித்ததை தமிழகத்திலுள்ள கல்வெட்டுகள் பல கூறுகின்றன.(இராசேந்திரன்இ சாந்தலிங்கம்இ 2017இ ஜீ.167) இக்கல்வெட்டு 400ஆண்டுகள் முற்பட்டதாக கருதலாம்.ள

### *8. மண்பறை கிராமம் - அங்காளம்மன் கோவில்இ மூலிகை ஓவியம் 04.01.2012*

திருச்சிராப்பள்ளி மாவட்டம்,முசிறி வட்டம்,மண்பறை கிராமத்தில் உள்ள எல்லையம்மன் கோவிலின் வளாகத்திலுள்ள வடபுறத்தில் உள்ள சிதைந்த நிலையிலுள்ள கோவிலின் சுவரில் நாயக்கார் கால மூலிகை ஓவியம் காணப்படுகின்றது. இது தற்போது சிதைவடைந்த நிலையில் காணப்படுகின்றது. தமிழகத்தில் விஜய நக நாயக்கார்கள் காலத்தில் வரையப்பட்ட ஓவியங்கள் “லெபாக்~ஜீ” வகை ஓவியமாகும். (மணிவண்ணன்இ 2005இ ஜீ.197) இக்கோயில் காரைக் கோயிலாக அமைக்கப்பட்டுள்ளது. விமானத்தின் சிற்பங்கள் காரையால் அமைக்கப்பட்டுள்ளது. இங்கு காணப்படும் இவ்வோவியம் அதிகம் சிதைந்த நிலையில் அவ்வோவியத்தில் பாதி மட்டுமே தெரியும் நிலையில் காணப்படுகின்றது. இவ்வோவியத்தின் இருபுறமும் துவார பாலகார்கள் வரையப்பட்டு நடுவே பெண் தெய்வ உருவம் வரையப்பட்டிருப்பதற்கான சிதைவுகள் காணப்படுகின்றது.

இது 17ம் நூற்றாண்டைச் சோர்ந்ததாக இருக்கலாம் எனக் கருதப்படுகின்றது. மேலும் இக்கிராமத்தில் பழமையான சப்த கன்னியார் கோயில் மற்றும் நாயக்கார் காலத்தில் கட்டப்பட்ட அங்காளம்மன் கோயில் உள்ளது இது காரையால் கட்டப்பட்து. இதில் நாயக்க அரசன்இ அரசியின் சிற்பங்களும்இ மண்டப விதானத்தில் இரட்டை மீன் சின்னமுர் பொறிக்கப்பட்டுள்ளது. பொதுவாக நாயக்கார் கால கோவில்களில் இந்த சின்னம் காணப்படும். இங்கு பேச்சியம்மன்இ இசக்கியம்மன் போன்ற பரிவார தெய்வங்கங்களுக்கும் கோவில் உள்ளது. கோவில் எதிரே குளம் காணப்படுகிறது. மேலும் இங்கு இரண்டு கல்வெட்டுகள் தணித்தனி கற்கலில் பொறிக்கப்பட்டுள்ளது. இங்கு நாயக்கார்கள் பயன்படுத்திய போர் வாள் ஒன்று பாதுகாக்கப்பட்டடு வருகிறது. இது விஜய நகர நாயக்கார்களின் பயன்பாட்டில் இருந்த வாளை ஒத்துள்ளது. இவ்வாள் எனது கள ஆய்வின்போது கண்டறியப்பட்டது. மற்றும் ஐயனார் கோவிலும் மற்றும் பழமை வாய்ந்த சிவன் கோயிலும் உள்ளது. இச்சிவன் கோயிலில் இரண்டு வாயில்களும் இரண்டு நந்தி மற்றம் பலிபீடமும் காணப்படுவது ஆராயத்தக்கது மற்றும் இக்கோயிலின் வெளி பிரகாரத்தில் ஜே~ர்டா தேவி சிற்பமும் காணப்படுகின்றது.

### *9. மண்பறை கிராமம் - வேடன் நடுகல்: 23.02.2018*



திருச்சிராப்பள்ளி மாவட்டம், முசிறி வட்டம், மண்பறை கிராமத்தின் தென்பகுதியில், முசிறி சாலை அருகே வேடன் ஒருவனுக்கு நடப்பட்ட நடுகல்

காணப்படுகின்றது. இந்நடுகல் வேடன் கையில் அம்புடன், இடையில் ஆடையோடும், குடுமியோடும் காணப்படுகின்றது. இதில் கல்வெட்டு ஏதும் காணப்படவில்லை. சிலை சற்று தேய்ந்த நிலையில் இருப்பதால் இதன் காலம் 1200 ஆண்டுகளாக இருக்கலாம் என கருதமுடிகின்றது. தமிழகத்தில் நடுகல் வழிபாடு சங்க காலம் முதல் இருந்து வருகின்றது.இங்கு காணப்படும் நடுகல். இப்பகுதி முற்காலத்தில் காடாக இருந்துள்ளது. இங்கு வேட்டையாடும் போது வேடன் விலங்கோடு போரிட்டு வீரமரணம் அடைந்துள்ளான். அவனின் நினைவாக இந்நடுகல் நடப்பட்டுள்ளது. சுங்க காலத்தில் ஆண்கள் வீரமரணமடைந்தால் நடுகல்லும், பெண்கள் வீரமரணமடைந்தால் சதிக்கல்லும் நடப்பட்டு வழிபடப்படும் மரபு இருந்துள்ளது குறிப்பிடத்தக்கது. (சாந்தலிங்கம்இ இராசேந்திரன்இ 2017இ ஜீ.142) மேலும் இவ்வூரின் வட புறத்தில் சாலை ஓரத்தில் ஒரு பாதையில் சோழார் காலத்திய சிவலிங்கம் அமைக்கப்பட்டிருந்த தடயம் கண்டறியயப்பட்டது, தற்போது அந்த லிங்கம் அருகே உள்ள வயலில் புதைந்த நிலையில் காணப்படுகின்றது, சோழார்களின் கலைப்பணி இந்த அழகிய சிலைவழி அறிய முடிகிறது.

**10. சிவலிங்கம் - குருவம்பட்டி**



திருச்சிராப்பள்ளி மாவட்டம், சோழார்களின் முற்கால ஆட்சிப்பகுதியாகும். கொடும்பாளூர்இ சீனிவாசநல்லூர் போன்ற இடங்களில் சோழார்களது கோவில் கட்டுமானங்களை காணலாம் (மணிவண்ணன்இ 2005இ ஜீ.226) மண்ணச்சநல்லூர் வட்டம், குருவம்பட்டி என்ற கிராமத்திலுள்ள ஏரியின் அருகே முக்காலத்தில் சிவன் கோயில் இருந்து பின் அழிந்ததற்கான தொல்லியல் தடயங்களாக சிவலிங்கமும், தீர்த்தக்கிணறும், சிதைந்த நிலையில் கோயில் கல்வெட்டும் கண்டுபிடிக்கப்பட்டது. இப்பகுதியில் சில கிராம தெய்வங்களின் சிலைகளும் கண்டுபிடிக்கப்பட்டது. இதன் மூலம் இப்பகுதி முற்காலத்தில் சிறந்த சிவத்தலமாக இருந்து வந்துள்ளது. இங்கு கண்டெடுக்கப்பட்ட சிவலிங்கம் 4 அடி உயரம் 3லு அடி அகலமும் உடையதாகும். இப்பகுதி சோழ மன்னார்களின் ஆட்சிக்கு உட்பட்ட பகுதியாக முற்காலத்தில் திகழ்ந்துள்ளது.

***11. தா.பேட்டை பௌத்த பீடம் 18.07.2018***



பௌத்த சமயம் தமிழகத்தில் கி.பி.9ஆம் நூற்றாண்டுகளில் பரவியிருந்துள்ளது. களப்பிரார் ஆட்சி முடிந்த நிலையில் பௌத்தம் செல்வாக்கை இழக்க தொடங்கியது. (வேங்கடராமன்இ 2006இ ஜீ.141) தற்போது திருச்சி மாவட்டம சக்கம்பட்டி என்ற ஊரில் சாலையோரம் புத்தார் சிலை அமைக்கப்பட்டிருந்த பீடம் மட்டும் கண்டறியப்பட்டது. இதன் அமைப்பு நீள் சதுரமாகவும்இ பீடத்தின்

கீழ் முன்புறம் யாழி (மூன்று சிங்கங்கள்) அமார்ந்த நிலையில் புடைப்பு சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது. சில ஆண்டுகளுக்கு முன் மங்களம் என்ற கிராமத்தில் உள்ள அரவாயி அம்மன் கோவிலில் ஒரு புத்தார் சிலை கண்டறியப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும். சமீவத்தில் இப்பகுதியில் வடமலைபட்டி அருகே சமணார் சிற்பம் ஒன்றும் கண்டறியப்பட்டது. எனவே இப்பகுதியில் முற்காலத்தில் சமணமும்இ பௌத்தமும் பரவியிருந்ததை அறிய முடிகிறது. இப்பீடம் 10 ஆம் நூற்றாண்டுக்கு பிற்பட்டதாக கருதலாம்.

## முடிவுரை

தமிழகத்தின் பல இடங்களிலும் இது போன்ற தமிழரின் முற்காலத் தொல்லியல் தடயங்களும், சிதைவுகளும் இன்னும் பரவலாகக் காணப்படுகின்றன.

இத்தகைய தமிழரின் பண்பாட்டுச் சின்னங்களை பாதுகாத்து முறையான கள ஆய்வுகள் மேற்கொண்டு தொல்லியலாளார்களும், ஆய்வு மாணவார்களும் தமிழரின் வரலாற்றை பலரும் அறியச்செய்ய வேண்டியது இன்றியமையாததாகும். இது போன்ற எத்தனையோ கலைச் சின்னங்கள் இன்னும் மண்ணிலும், முட்புதார் மறைவிலும் மறைந்து காணப்படுகின்றது. அத்தகைய கலைச் சின்னங்களைப் பாதுகாப்பது நமது கடமையாகும்.

**References**

*Akananuuru*.

Bawani, M. (2017). *Tamilaha varalatru Avanangkal*. Thanjavur: Kalveddiyal & Tholliyal Thurai.

Kasinathan Nadana. (1989). *Kalleluthukalai*. Chennai: Manivasakar pathipagam.

Manivannan, L., Ambai. (2005). *Kovil Aivum Nerimuraigalum*. Madurai: J J Publications.

Manivannan, L., Ambai. (2005). *Tamilaga Koyirkalai varalaru*. Madurai: J J Publications.

Manivannan, L., Ambai. (2095). *Thirukovil Amaipum Thiruvuruva Amaithiyum*. Madurai: A.R.Publications.

Nagasamy, R. (1972). *Sengam Nadukarkal*. Chennai: Tholliyal Thurai.

Rajan, K. (2006). *Kalveddiyal*. Thanjavur: Mano Publications.

Rasenthiran, P. (2017). *Kalveddukkalai*. Chennai: New Century Book House.

Rasu, S. (2001). *Seppedu Pathipittalil Anukumurai*. Thanjavur: Kalveddiyal & Tholliyal Thurai.

*Tholkappiyam*.

Vengkadaraman. (2006). *Tamil Ilakiya Varalaru*. Namakkal: Kalaiyaga Veliyidu.